Registered No. M. 2330

'SIDDHANTHA'
Vol. 30—No. 7

# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'



மலர் 30 | ஹேவிளம்பி ஆடி 1957 ஜுலை | இதழ்

உள்ளுறை

பக்கம்



பத்திராசிரியர் : C. M. இராமச்சந்திரன் செட்டியார், பி.ஏ., பி.எல்.

உதவிப் பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஓ.எல்.

சைவ சித்தாந்த மகா சமாஜம்

14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை–4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா 4

## சமாஜச் செய்திகள்

13–6–57 வியாழன் அன்று மாலை 7 மணிக்குத் திருமயிலைக் கபாலீச்சரத்தில், சமாஜத்தின் சார்பில், திருஞானசம்பந்தர் திருநாள் சிறப்புறக் கொண்டாடப்பெற்றது. இராமகிருஷ்ணமடம் சுவாமி பரமாத்மானந்தா அவர்கள் தலைமையில், வித்துவான் வை. குஞ்சிதபாதம் பிள்ளை அவர்களும், சைவப் பெரியார் ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்களும் சொற்பொழிவாற்றினர். ஞானிகள் செய்யும் உபதேச மொழிகள் உயிர்களுக்கு விளைவிக்கும் அரிய பல நன்மைகள் திருஞானசம்பந்தர் அருள் ஒளியிற் கலந்த சிறப்பு, சமய உணர்ச்சி, சமயப் பாதுகாப்பு என்பனவற்றின் இன்றியமையாமை ஆகிய பல அரிய பொருள்களைப்பற்றி மூவரும் முறையே விளக்கினர். சமாஜத்தின் புதிய செயலாளர் திரு. எம். பி. தியாகராஜ முதலியார் பி. ஏ. அவர்கள் நன்றியுரைகள் நவின்றார். விழா முழு வெற்றியுடன் நன்கினிது நடைபெற்றது.

1-7-57 திங்கட்கிழமை மாலை 7 மணிக்கு, மாணிக்கவாசகர் விழா சமாஜச் சார்பில் நடைபெற்றது. சென்னை நகராண்மைக் கழகத் துணை ஆணையாளர் திரு. என். சங்கரன் எம்.ஏ., எல்.டி. அவர்கள் தலைமை தாங்கினார்கள். இறைவனுண்மையில் உறுதியான தெளிவும் ஒழுக்கமும் நமக்கு இருக்கவேண்டுவதன் இன்றியமையாமையை வற்புறுத்தினார்கள். பிறகு திரு. ரா. சண்முகசுந்தரஞ் செட்டியார் அவர்கள் (John Ruskin) என்பவர் " Books for ever " என்று கூறியபடி, திருவாசகம் எக்காலத்துக்கும் உரிய சிறந்த பெருநூலாதலை விளக்கிப் பேசினார்கள். சமாஜப் பெரியார் இராவ் சாகிப் திரு. நல். முருகேச முதலியார் பி. ஏ. அவர்கள் சிவஞானபோதம் 8–12ஆம் சூத்திரங்களைத் தழுவி மணிவாசகரின் மாண்புகளை விரித்துரைத்தார்கள். பின்னர் அறநிலையப் பாதுகாப்பு ஆணையாளர் திரு. உத்தண்டராமப் பிள்ளை ஐ.ஏ.எஸ். அவர்கள் "வாசகமும் வாச்சியமும்" பற்றி விளக்கினார்கள். செயலாளர் நன்றிகூற, விழா இனிது முடிந்தது.

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு.

மலர் 30 | ஹேவிளம்பி ஆடி 1957 ஜூலை | இதழ் 7

## சமயவாழ்க்கையும் கூடாஒழுக்கமும்

ஆசிரியர்

பிறநாடுகளிலிருந்து நமது நாட்டிற்குப் பல புதிய பழக்கங்கள் வந்திருக்கின்றன. அவைகளில் ஒன்று புகையிலைப் பழக்கம். புகையிலை அமெரிக்க நாட்டுச் செடி. நமது நாட்டில் அது மூன்று நூற்றாண்டுகளுக்கு முன் இருக்கவில்லை. அதன் இலையில் ஒருவகைக் காரச் சத்து இருக்கிறது. அது உடலில் உள்ள நரம்புகளை மயக்குகிறது. புகையிலையைப் பொடியாக்கி மூக்கின் உறிஞ்சுவது ஒரு கொடிய பழக்கம். அதனைப் பொடி போடுவது என்பார்கள். அத்தூள் மூக்கில் ஏறினால் மூக்கின் உள்ளிருக்கும் நுட்பமான நரம்புகள் சுருசுருப்படைந்து பிறகு மயக்கமுற்று ஒருவித இன்பம் தருகின்றது. இந்தப் பழக்கம் கட்குடியைப் போன்று ஒருதடவை ஏற்றுக்கொண்டால் அது மீண்டும் மீண்டும் தூண்டிவிடும். சமய வாழ்க்கையில் ஈடுபட்டவர்கள் இந்தப் பழக்கத்தால் தங்கள் வழிபாட்டிற்கு மிகுந்த தடை ஏற்படுவதை நேரில் அறிவார்கள். மூக்கும் அசுத்தமாகும், சளியும் தொந்தரவுபடுத்தும், துணிமணிகளும் தூய்மைகெடும்.

இனி புகையினால் கிடைக்கும் மற்றொரு பொருள் சுருட்டு ஆகும். இது மலம் கழிப்பதற்குச் சாதகம் ஆகும் என்பர். ஆனால் உண்மையில் இதனால் நுரையீரலுக்கு மிகுந்த கேடு உண்டாகிறது. புகையிலையில் உள்ள நச்சுப்

பொருள் புகையாகி நுரையீரலில் புகுந்தால் அதனை மயக்கி அழித்துவிடும். ஆனல் குடிக்கும்போது மிகவும் இன்பமாக இருக்கும். குடிக்கப் பழகிவிட்டால் பின்னர் அதனை விட முடியாது. புளியமரத்துப் பேய்போல ஒரு ஆளைப் பிடித்து அடிமையாக்கிவிடும். எச்சில் உமிழும் பழக்கம் ஏற்பட்டு நோய்களை நாட்டில் பெருக்குவதற்கு இந்தப் புகையே அடிப் படைக் காரணம். நாடகம்,சந்தை,புகைவண்டி முதலியவை களில் இதன் கொடுமையை வெகு அதிகமாகக் காணலாம்.

புகை குடிப்பவர்கள் அதனைச் சிறிது பொழுதாகிலும் தடுக்க இயலாதவர்களாக இருக்கின்றனர். சமய வாழ்க்கை யில் ஈடுபடுகிறவர்கள் வழிபாடு இயற்றுவார்கள். அதற்கு நாடோறும் ஓரளவுநேரம் தரவேண்டும்.அவ்வாறு வழிபாட் டிடையிலே புகை குடிக்கும் நினைவு வந்துவிட்டால் அந்தச் சபலமானது வழிபடுபவனை ஒருநிலையில் இருக்கவிடாது. வழிபாட்டில் கவனம் செலுத்துவதற்குப் பதிலாகப் புகை குடித்தலிலேயே கவனம் செலுத்தி வழிபாட்டில் பலனை இழப்பார்கள். இந்தக் கேடுகெட்ட நிலை சிலநாள் அளவில் தடுக்கவே இயலாது. இறுதியில் வழிபாட்டிடையிலேயே பொடி போடுபவர்போல சுருட்டுப் பிடிக்கவும் தொடங்கு வார்கள். இந்நாளில் கூலியாட்களும், வண்டிக்காரர்களும், கல் அடிப்பவர்களும், ஊர் சுத்தி செய்பவர்களும்கூட சுருட்டு முதலியவைகளைப் பிடிப்பதுபோல வழிபாட்டின் இடையிலும் சுருட்டு பிடிக்க நேரிடும். நந்தவனங்களில் நீர் இறைத்து மலர்களை எடுத்து மாலை கட்டும் தூய்மைப் பணி யாளர்களும் சில இடங்களில் புகை பிடிக்கக் கண்டிருக் கிறேன். ஒரு காவியுடையாளர் நந்தவனத்திற்கு நீர் இறைக் கும்போது வாயில் புகை விட்டுக்கொண்டே அப்பணி செய்து வந்தார். காவியணிந்த எத்தனை வெறுமை ஆட்கள் இந்த சுருட்டுக்கு அடிமைகளாகித் தம் வாழ்க்கையைக் கெடுத்துக் கொள்ளுகிறார்கள். இதனை எவரே தடுக்கவல் லார்? சமயப் படிப்பு சரியாக இருந்தால் இக்கொடிய பழக்கம் நாட்டில் ஏறுமா?

இனி சுருட்டைக் காட்டிலும் கொடியவை பீடியும், சிகரெட்டு என்னும் சிறு சிருட்டுமாம். இவைகளைக் குடிக் கப் பழகுகிறவர்கள் நாள் ஒன்றுக்கு 40, 60 சதவீதம் பிடிப் பார்கள். சிறு குழந்தைகளும் இவைகளைப் பிடித்துத் தங்கள்

நுரையீரலைக் கெடுத்துக்கொள்ளுகிறார்கள். இந்தப் பழக்கத்தினால் மூச்சுப் பைகளில் புற்றுநோய் உண்டாகிறது என்று கூறுகிறார்கள். சென்ற 50 ஆண்டுகளாக விஞ்ஞான மருத்துவர்கள் இதனைச் சோதித்து வந்திருக்கிறார்கள். சரியான காரணம் கூற வகை கிடைக்காமல் போனபோதிலும் புற்றுநோய் உண்டாவதற்குப் புகைகுடித்தல் அனுகூலமாக இருக்கிறது என்றே கூறுகிறார்கள். இந்த நோய் மிக்க கொடியது. ஒருமுறை வந்துவிட்டால் அதற்குச் சிகிச்சை கிடையாது. மனிதன் அடைக்கலம் புகுவதே முடிவு. புற்று நோய்க்கு அனுகூலமான செய்திகள்.

1. வாயில் புகையினால் மிகுதியான வெப்பம் தங்கி அங்கேயே அது அமைகிறது.

2. புகையில் புற்றுநோய் உண்டாக்கக் கூடிய சிறு தூசிகள் இருக்கலாம்.

3. புகை நரம்புகளை வாட்டுகிறதினால் புற்றுநோய்க்கு வளமை ஏற்படுகிறது.

இந்தக் காரணங்களை வைத்துக்கொண்டு ஆராய்ச்சி செய்தவகையில் சில கணக்குப் புள்ளிகள் கிடைத்தன.

1. சுவாசப்பைப் புற்றுநோய் பெண்களில் குறைவு. அவர்கள் புகை குடிப்பது குறைவு.

2. புற்றுநோய் நாட்டுப்புறத்தைவிட நகரங்களில் மிகுதி. அதே காரணம்.

சென்ற 35 ஆண்டுகளாகச் சுருட்டுப் பழக்கம் குறைந்து சிகரெட்டுப் பழக்கம் அதிகமாகிவிட்டது. 1920-ல் ஒரு மனிதன் 1·89 ராத்தல் சிகரெட்டு குடித்தான். 1953-ல் 10·09 ராத்தல் குடித்தான். சிகரெட்டு புகை சுவாசப் பைக்குள் செல்லுகிறது—சுருட்டோ வெளியே நின்றுவிடுகிறது.

ஆகவே சுருட்டைவிட சிகரெட்டு மிகவும் கொடியது. புற்றுநோய் வளர்ச்சிக்குச் சாதகம் ஆனது.

சிகரெட்டு சத்தினைச் சில சுண்டெலிகளுக்குத் தடவிப் பார்த்ததில் 100-க்கு 43 எலிகள் புற்றுநோய் கண்டு இறந்துவிட்டனவாம். ஆனால் மனிதனுக்கு இது எத்தனைப் பொருத்தமோ இன்னமும் கண்டு பிடிக்க முடியவில்லையாம்.

ஒருநாள் ஒன்றுக்கு 40 சிகரெட்டு வீதம் 25 ஆண்டுகள் குடிக்கிறவனுக்கு சிகரெட்டு குடியாதவனைக் காட்டி

லும் 52 வீதம் நுரையீரல் புற்றுநோய் உண்டாகுமாம். இனி நாள் ஒன்றுக்கு 25 சதவீதம் 25 ஆண்டுகள் குடிக்கிற வனுக்கு குடியாதவனைக் காட்டிலும் 22 மடங்கு நோய் உண்டாகுமாம். நாள் 10 சிகரெட்டுகளை 25 வருடம் குடிக் கிறவன் குடியாதவனைக் காட்டிலும் 11 மடங்கு நோய் உண்டாகுமாம். இந்தக் கணக்கைச் சோதித்தால் புகை குடிப்பதன் விளைவு நன்ருக புலப்படும் அல்லவா ?

மூர்த்தி நாயனுரைத் துன்புறுத்திய வடுகக் கருநாடக மன்னன் திடீரென இறப்பதற்கு இந்தப் புற்றுநோயே காரணமாக இருக்கலாம். சமய ஈடுபாட்டில் இல்லாமல் பல கெட்ட பழக்கங்களைக் கொண்டிருந்தவனுகையால் அவனைக் கொன்ற நோய் இதைப்போன்ற நச்சுப் பொருள்களின் துய்த்தலேயாக இருக்கலாம் அல்லவா? சமய வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் நமது அன்பர்கள் புகைக்குடி போன்ற பழக்கங்களில் ஈடுபடாமல் இருப்பார்களாக !

---

# *மொழியும் பண்பும்

**புலவர் - முருகவேள், எம்.ஓ.எல்.**

"மொழியும் பண்பும்" ஒரு நாட்டு மக்களின் விழு மிய செல்வங்களாகும். நாட்டிற்கு விழுப்பம் விளக்கும் அவை இரண்டினையும் உயிரினும் மேம்பட்டனவாக மதித் துப் போற்றுதல் வேண்டும். "நிலத்திற் பிறந்தமை கால் காட்டும், காட்டும் குலத்திற் பிறந்தார் வாய்ச்சொல்" என் னும் பொய்யாமொழிக் கிணங்க, ஒரு தனி மனிதனின் பண்பினை அவன்றன் வாய்மொழியின் வைத்து நாம் உணர்ந்து கொள்ளுதல் கூடும். அங்ஙனமே, ஒரு நாட்டு மக்களின் பண்பாட்டினையும் மனப்பான்மையினையும், அவர் தம் மொழியின் இயல்பும் அமைப்பும் கொண்டு நாம் ஆராய்ந்து கொள்ளலாம். 'They accorded a warm reception என ஆங்கிலேயர் கூறுதற்கும், 'குளிர்மொழி

---

*தூத்துக்குடிச் சைவ சித்தாந்த சபையின் 73-வது ஆண்டு விழாவில், திரு. "கோவைகிழார்" அவர்கள் தலைமையில், பேசிய தனைத் தழுவியது.

கள் கூறி வரவேற்றார்' என நாம் தமிழிற் சொல்லுவதற் கும் உள்ள வேறுபாட்டின் காரணத்தினை உணரவல்லார் இவ்வுண்மையை மறுத்து உடன்படுவர். 'கிழக்கு' 'மேற்கு' 'படுஞாயிறு' என்னும் சொற்களை மலையாளிகள் இன்றும் வழங்கி வருவதொன்றே, மலையாள மக்கள் தமிழ் நாட்டில் இருந்து மேலைக் கடற்கரை போந்து குடியேறியவர்கள் என்பதற்கும், மலையாள மொழி தமிழின் கிளைமொழிதான் என்பதற்கும் போதிய சான்றும் எனப் பேரறிஞர் கால்டு வேலர் அவர்கள் விளக்கி யிருக்கும் செய்தியும், அது போன்ற பிறவும் ஈண்டு உளங்கொளத் தக்கன.

ஒரு மொழியில் வழங்கும் இன்றைய சொற்களில், அதனைப் பேசிய பண்டைய மக்களின் அரசியல் இனவியல் முதலிய செய்திகளை உணர்த்தும் சான்றுகள், கல் மாறிகள் (Fossils) போல அமைந்து கிடந்து நிழலாடுகின்றன. ஒவ்வொரு நாட்டு மக்களின் அக வாழ்க்கையும், அவரவர் மொழிகளிற் படிந்து, எதிர்கால மக்களுக்குத் தன்னை அறிவுறுத்தி நிற்கின்றது. மொழியானது மக்களின் உள்ளுணர்ச்சிகளை வெளியிட்டுணர்த்தும் வாயிலே யாகலின், அஃது அவ்வுள்ளுணர்ச்சிகள் தோன்றுதற்குக் காரணமாய அம்மக்களது அறிவின் பெற்றியினைச் செவ்விதிற் புலப் படுத்தவல்லதாகும். அவ்வம் மக்களின் அறிவிற்கும் பண் பிற்கும் ஏற்பவே, அவர்கள் வழங்கும் மொழியின் அமைப் பும் பண்பும் உருப்பெறுகின்றன. எனவே, ஒவ்வொரு மனி தனுக்கும் உரிய பண்புகள் சில இருத்தல்போல, ஒவ்வொரு மொழிக்கும் உரிய பண்புகள் சில உளவாதல் பெறப்படும்.

1 "சொற்களின் குடியரசில், பன்மனைவியர் மணமோ- பலகணவர் மணமோ இல்லை. அங்கே ஒரு சொல்லுக்கு ஒரு பொருள், ஒரு பொருளுக்கு ஒரு சொல் என்பதுதான், கடுமையான மீறமுடியாத சட்டமாகும்."

---

1. "In the commonwealth of words, there is neither polygamy nor polyandry. One word one meaning, one meaning one word, is the rigid and inviolable law. It follows that there are no synonyms, no real synonyms, only rough approximations"—P. B. Ballard.

2"சமய வரலாறுனது, ஒரு கடவுள் நம்பிக்கையி னின்று பல கடவுளர் நம்பிக்கைக்குச் செல்லாமல், பல கடவுளர் கொள்கையிலிருந்து ஒரு கடவுட் கொள்கைக்கே உலகம் முழுதும் சென்றிருத்தலைப்போல—மொழிகளும் முதலில் நீண்ட பல அசைச்சொற்களால் இயன்று, பின் னர்க் குறுகிய ஓரசைச் சொற்களாக அமைந்து நடை பெற்று வருகின்றன."

3"மொழிகள் அழுக்கா றுடையன. அவைகள், தம் மின் முரணியதோர் அயல்மொழியைச் சார்ந்த தரகரைக் கொண்டு முயலுபவர்க்குத் தமது அறிவுக் களஞ்சியத் தினைக் காட்டுவதில்லை. நாம் அவற்றோடு தனித்த நிலையிற் காதல் புரிதல் வேண்டும்; அவைகள் விரும்பி மகிழுமாறு பணிவிடைகள் செய்து, அணுக்கத்தொண்டு ஆற்றுதல் வேண்டும். ஒரு மொழியின் கவிதைகள், அங்காடிச் சரக்கு களைப்போலக் கைம்மாறக் கூடியன அல்ல. எத்துணைதான் முயற்சித்திறம் மிக்க - மகிழத்தக்க சார்புரையாளராய் இருப்பினும், அவரது துணைகொண்டு வழக்காடி முயன்று, நாம் நமது காதலியின் புன்முறுவலையும் கடைக்கண் நோக் கினையும் செயற்கை முறைகளிற் பெறமுடியாது."

என்றிங்ஙனம் வரூஉம் அறிஞர்களின் கூற்றுக்கள் பலவற்றைத் தொகுத்துக் காணின், மொழிகட்கும் நம்ம

---

2. "Language proceeds from original polysyllabism towards monosyllabism, just as the history of religion does not pass from the belief in one God to the belief in many gods, but universally from polytheism towards monotheism......"—Otto Jespersen.

3. "Languages are jealous. They do not give up their treasures to those who try to deal with them through an intermediary belonging to an alien rival. We have to Court them in person and dance in attendance on them. Poems are not like market commodities transferable. We cannot receive the smile sand glances of our sweetheart, through an attorney, however diligent and delightful he may be"—Rabindranath Tagore.

ஞேர்போலச் சில சில பண்புகள் உண்டென்ப துணரப் படும். ஐந்தாம் சார்லஸ் என்னும் பேரரசர், 4"யான் எனது குதிரைகளிடம் ஜெர்மன் மொழியையும், கடவுளிடம் ஸ்பானிஷ் மொழியையும், நண்பர்களிடம் பிரெஞ்சு மொழியையும், காதலியரிடம் இத்தாலிய மொழியையும் பேசுவேன்" எனக் குறிப்பிட்டதாகக் கூறப்படும் செய்தியானது, ஒவ்வொரு மொழிக்கும் உரிய தனித்தனிப் பண்பு ஒன்றுண்டு என்னும் கருத்தைப் பெரிதும் அரண் செய்வதாகும்.

பிரெஞ்சுக்காரராகிய ஜே. வேண்ட்ரியே என்னும் மொழிநூலறிஞர், 5"ஆங்கில மொழியின் சொற்கோவையானது பிரெஞ்சு மொழியைப் போலன்றிச் சமயச் சார்புடைய பொருள்களுக்கும் சான்ருேர்களுக்கும் ஐயத்திற்கிடனின்றிப் பெருமதிப்பைக் காட்டுவதாய்ச் சிறந்து விளங்குகின்றது...பிரெஞ்சுக்காரர்கள் பெண்பாலாரோடு தொடர்புடைய சொற்களில், தகவற்ற அல்லது இழிந்த எண்ணங்களைத் தயக்கமின்றி விரைந்து இணைத்துக்காணமுற்படுகின்றனர்..." என ஆராய்ந்து கூறியிருத்தலும் ஈண்டு நாம் கருதுதற்குரியது. மேலும், அவ்வறிஞர் விளக்கிக் காட்டி இருத்தல்போல, தந்தை எனப் பொருள்படும். Papa, Abba என்னும் சொற்களினின்றே Pope, Abbot, Abbey முதலிய சொற்கள் தோன்றின. Gospel என்பது God+spell என்னும் இருசொற்களின் புணர்ப்பே. ஆங்கில மக்கள் பலர் தமது பேச்சினிடையே பொருட்டெளிவின்றி அடிக்கடி வழங்கும் Bloody என்னும் சொல்லானது, மரியம்மையை நினைவுறுத்தும் By our Lady என்னும் சொற்

---

4. "There seems to be a germ of truth in the well-known saying of the Emperor Charles V, that he would use German to his horses, Spanish to his God, French to his friends and Italian to his mistresses"—Taraporewalla.

5. "Thus, the English vocabulary would doubtless reveal a greater respect for religious things and persons consecreted to, than the French...On the other hand, the Frenchman readily attaches indecent or obscene ideas to words relating to the fair sex."—J. Vendryes.

ருெடரின் மரூஉவேயாம். இருவர் தம்முட் பிரிவதற்கு விடைபெறுங்காற் கூறிக்கொள்ளும் Good-bye என்பது, "கடவுள் நின்னேடு துணையாக இருப்பாராக" எனப் பொருள்தரும் God be with you என்பதன் சிதைவே யாகும். Adieu என்னும் பிரிவிடைக் கூற்றும் இக்குறிப் பினதே என்பர். Farewell என்பதும் "செல்லும் நெறி யனைத்தும் சேமநெறியாக!" என்ருற் போல்வதொரு வாழ்த்துதலே. மக்கட் சூழலில் இடையீடின்றி அவ்வப் போது வழங்கப்பெறும் இச்சொற்களில் சமய உணர்வு ததும்பி நிற்றல் தெளிவு.

இன்னேரன்ன செய்திகளால், ஆங்கில மொழியின் சொற்கோவையானது சமயப் பொருள்களுக்கும் சான் ருேர்களுக்கும் பெருமதிப்புக் காட்டும் பெற்றிமை வாய்ந் தது என்னும் உண்மை வலிவுறுகின்ற தன்ருே?

இங்ஙனமே, தமிழிலுள்ள சொற்களுட் சிலவற்றை ஆராய்ந்தாலும், "ஞாலம் அளந்த மேன்மைத் தெய்வத் தமிழ்" எனச் சேக்கிழார் பெருமான் சிறந்தெடுத்துப் புகழ்ந்தமைக்குரிய பெருந் தகுதியினை, அது பெற்றிருத்தல் தெளியலாம். கடவுள் - இறைவன் - இயவுள் - கந்தழி - உலகு - உடல் - உயிர் - உண்மை - வாய்மை - மெய்ம்மை - தவம் - ஒழுக்கம் - கற்பு முதலிய சொற்களில் செறிந்துள்ள திட்பநுட்பம் சான்ற அரும்பெருங் கருத்துக்கள்தாமே, பழந்தமிழ் மக்களின் அறிவறிந்த பண்பினையும் உயர்வற உயர்ந்த நாகரிகச் சிறப்பினையும் உள்ளவாறு உணர்தற்குப் போதிய சான்றுகளாகும். பழந்தமிழர்களிடையே வழங்கி வந்த சொற்களைச் சான்றுகளாகக் கொண்டே, கால்டு வேலர் அவர்கள், ஆரியர்க்கு முற்பட்ட தமிழர் நாகரிகச் சிறப்பினைத் தமது ஒப்பிலக்கண நூலில் விரிவாக விளக்கிக் காட்டுகின்ருர். இம்மட்டோ! எழுத்துக்களுக்கு உயிர் எழுத்து, மெய் எழுத்து, உயிர்மெய்யெழுத்து எனப் பெயர் கள் அமைத்து வழங்கியதும்; சொற்களைச் சொல் நோக் காது பொருள் நோக்கி உயர்திணை அஃறிணை, ஆண்பால் பெண்பால் என பாகுபாடு செய்ததும்; உலகில் வேறு பிற எம் மொழிகளிலும் காணப்படாத வகையில், எழுத்தும் சொல்லும் மட்டுமே யன்றி, அவற்ருல் உணரப்படும் "தள்ளாப் பொருளியல்பிற் றண்டமிழ்" எனப் புகழ்ந்

தோதுதற் கேதுவாய பொருளிலக்கணத்தையும் புரையற முழுதும் எடுத்து வகுத்துணர்த்தி, மக்களின் வாழ்க்கை நெறிமுறைகளைத் தெளிவுறுத்தி இருப்பதும் பிறவும், செந்தமிழ் மொழிக்கே, யுரிய சீரிய சிறப்பியல்புகளாக அறிஞர்கள் அனைவரும் ஒருமுகமாகப் புகழ்ந்து போற்றி யிருத்தலும் நமக்குப் பெருமிதம் விளைவிப்பதாகும். மேலும் ஈண்டு நாம் உணர்ந்து கருத்தில் இருத்தற்பாலது ஒன்றுண்டு!

"Those who have seen Him, have not spoken;
Those who speak, have not His token."

என்பதற்கு ஏற்ப, இறைவனைக் "கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்" என்பது ஒருவகையில் உண்மையாகக் கூடுமாயினும், "தமிழர்களுட் சான்றோர்கள் பலர் இறைவனைக் கண்டனர்! கண்டது மட்டுமேயன்றி அவனருள் நுகர்சுவை விண்டனர்!" என நாம் கூறி மகிழும் வண்ணம், நம் அருமைத் தமிழ்மொழியில்தான் ஆழ்வார்களும் நாயன்மார்களும் ஆயிரக்கணக்கான பாடல்களில் இறையருளின்ப அனுபவ நலத்தினை யாவரும் இனிதுணர விளக்கிப் பாடியிருக்கின்றனர். தமிழ்மொழியின் சிறப்பியற் பண்புகளில் இதுவும் ஒன்றாகும்.

தமிழின் இத்தகைய தனிப்பெருஞ் சிறப்பியல்புகளைத் தகவுற உணர்ந்தே பேரறிஞர் ஒருவர், [6]"சட்டத்திற்கு இலத்தீனும், சால்பறத்திற்கு ஈபுருவும், மெய்ப்பொருளியல் ஆராய்ச்சிக்கு வடமொழியும், அறிவியலுக்கு ஆங்கிலம் பிரெஞ்சு செர்மன் மொழிகளும் போல, இறையருளின்ப நுகர்வின் கவிதைகளுக்குத் தமிழ்மொழி சிறப்பு வாய்ந்ததாகும்" எனப் போற்றிப் புகழ்ந்தார். நடுவுநிலை நெறிப் பேரருளாளராகிய அருட்டிரு. இராமலிங்க அடிகளார், "இடம்பத்தையும், ஆரவாரத்தையும், பிரயாசத்தையும்,

---

6. "If Latin is the language of law, Hebrew the language of ethical religion, Sanskrit the language of philosophy, English French and German the languages of science, Tamil is the language of the poetry of Divine experience."—Prof. T. P. Meenakshisundaranar.

பெரு மறைப்பையும், போதுபோக்கையும் உண்டுபண்ணு கின்ற ஆரியம் முதலிய பாஷைகளில் எனக்கு ஆசை செல்ல வொட்டாது, பயிலுதற்கும், அறிதற்கும் மிகவும் லேசுடைய தாய், பாடுதற்கும் துதித்தற்கும் மிகவும் இனிமையுடைய தாய், சாகாக் கல்வியை லேசில் அறிவிப்பதாய்த் திருவருள் வலத்தாற் கிடைத்த தென்மொழி ஒன்றனிடத்தே மனம் பற்றச் செய்து அத்தென்மொழியாற் பலவகைத் தோத் திரப் பாட்டுகளைப் பாடுவித்தருளினீர்" என இறைவன் தமக்குச் செய்த பேருதவியை நினைந்து வழுத்துதலும் அறிந் தின் புறற்பாலது. தமிழ்மொழியானது தன்னைக் கற்றுணர் வோர்க்குச் சிறந்த பல பண்புகளை விளைத்தருளுகின்றது என்னும் உண்மை, "அதூஉம் சாலும் நற்றமிழ் முழுதறி தல்" எனவரும் மோசிகீரனுர் (50) புறநானூற்றுப் பாடலா லும், "பிறந்து மொழி பயின்ற பின்னெல்லாம் காதல் சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்" எனப் பாடிய காரைக்காலம்மையார் திருமொழியாலும் விளங்கும். ஆங்கி லேய மக்கள் தம்முடைய மொழியைச் செகப்பிரியரும் மில்ட்டனும் பேசியமொழி என்றும், விவிலிய நூலைப் பெற் றுள்ள மொழி என்றும் போற்றிப் பெருமிதங் கொள்கின் றனர்; நாமும் நம்முடைய அருமைத் தமிழ் மொழியைத் தொல்காப்பியரும் திருவள்ளுவரும் சங்கப் புலவர்களும் சமயச் சான்றோர்களும் வழங்கிய மொழி என்றும், தொல் காப்பியம், திருக்குறள், தேவாரம், திருவாசகம், திருமந்திரம், சிவ ஞானபோதம் முதலிய அருட்பெரு நூல்களைப் பெற்றுள்ள மொழி என்றும் எண்ணி எண்ணி இன்புற்றுப் பெருமிதம் எய்தலாம். எனவே, இதுகாறும் கூறியவாற்றால், தமிழ் மொழியின் அறிவு நலமும் அதன் பயனாக விளையும் சைவ சமயப் பண்பு நலமும், தமக்குள் ஒன்றினொன்று பிரிவற விரவி மிக நெருங்கிய தொடர்புடையவாதல் நுண்ணுணர் வினர்க்குப் புலனாகாமற் போகாது. சைவமும் தமிழும் தழைத்தினிது ஓங்குக!

மொழிகள் பலப்பலதாம் மூதுலகில் உண்டு!
இழிவின் றவையுயர்ந்த வேனும்,—விழுமியநம்
செந்தமிழ்போல் தெய்வத் திறம்சிறந்த சீர்த்தி,மற்றை
எந்த மொழிக்குமில்லை ஈண்டு! (1)

சட்டத்தில் லத்தீனம் ; சால்பறத்தில் ஈபுருவம் ;
தட்பமிகு மெய்யுணர்வில் சம்ஸ்கிருதம் ;—நுட்பமிக
ஆன்ற அறிவியலில் ஆங்கிலம்சேர் மன்பிரெஞ்ச்போல்,
சான்றஇறை மாண்பில் தமிழ். (2)

நம்மருமைச் செந்தமிழின் நல்லமைப்பை ஆராய்ந்தால்,
செம்மைமிகு சீர்ச்சைவ சித்தாந்த—மெய்ம்மைகள்தாம்
எல்லாம் பொதிந்தொளிர்தல், யாரும் இனிதுணர்ந்து
நல்லோராய் வாழ்வர் நயந்து ! (3)

---

# ஞானச் செய்தி

[K. இராமநாதன் செட்டியார்]

(மலர்-30 ; இதழ் - 6 ; 184-ம் பக்கத் தொடர்ச்சி)

**அறிவின் முறைகள் :** கல்வித்தாய் கட்டழகி. அவளே போல் கல்வியும் செவிக்கினியது ; வாய்க்கினியது ; கருத்திற்கினியது. கற்றோர்க்கு அழகு தருவது. ஆயுந்தொறுந் தொறுங் கல்வி இன்பந்தரும். ஆய்ந்துகொண்டே போகலாம். படிப்பில் கவனஞ் செலுத்துகிறவர்கட்குப் பிற விஷயங்களில் கவனஞ் செலுத்த முடிவதில்லை. ஆயினும் ஒரு வாழ்க்கையில் கற்க முடிந்தது கைம்மண்ணளவு கூட இல்லை. ஒரு விஷயத்தையேனும் முழுதும் உணர முடியவில்லை. ஆடு தழை தின்றாற்போல் அதில் சிறிது இதில் சிறிது கற்கிறோம். கற்குஞ் சிறு பாகத்தையும் ஐயமறத் திரிபின்றிக் கற்பது அருமை. அவ்வாறு கற்றாலும் ஒருதெளிவு, ஒரு திட்டம் ஏற்படுதல் அருமை. கற்கக் கற்க அறியாமையின் விலாசமே பெருகிக்கொண்டு போகிறது.

**ஞானம் :** அறிவைக் கொண்டே அருள் என்று ஒன்று உண்டு எனத் தெரிந்துகொள்ளவேண்டும். அறிவுத் தாயே அருள் தாயை யடைய வழிகாட்டுகிறாள். எவ்வளவு சாத்திரங்கள் படித்தாலும், கடவுளை அடைந்துவிட முடியாது. அனுபவமும் அவனருளும் வேண்டும். வேதாகமப் படிப்

பெல்லாம், அபரஞானப் படிப்பென்பார்கள். பரஞானம் கடவுளை உணர்தல். பஞ்சாங்கத்தில் ஒரு வருடம் அதிக மழை பெய்யுமெனக் குறித்திருந்தது.

ஆயினும், பஞ்சாங்கத்தைக் கசக்கிப் பிழிந்தாலும் ஒரு சொட்டுத் தண்ணீர் காண முடியாதென்று உணரவேண்டும். ஆகையால், படிப்பால் தெரிந்துகொள்வது ஒருவிதம். அனுபவத்தால் தெரிந்துகொள்வது ஒரு விதம். இதனை அருணந்தி சிவாச்சாரிய சுவாமிகள் பாயிரச் செய்யுளொன்றில் நன்கு விளக்குகிறார்கள். ஆகமத்தேயறியலாம்: ‘அளவினாலும் தெருளலாம்’ ‘ஞானச் செய்தியால் சிந்தையுள்ளே மருளெலாம் நீங்கக் கண்டு வாழலாம்’ ‘உபதேசத்தாற் கேட்டறியலாம்’ ‘அளவையால் (Logic) சிந்தித்து மறியலாம்’ ‘சிவஞானத்தால் மாசறத் தெளிந்து மறியலாம்.’

இப்பகுதியை சிவஞான பாஷ்யக்காரர் நன்கு விளக்குகிறார்கள். நூல்களும், அளவையும் உண்மை ஞானத்தைத் தோற்றுவிக்கும் முகத்தான் பயன்படும். வேறு பயனில்லை. ‘மருளெலா நீங்கச் சிந்தையுள்ளே காண்டல்’ ஞானச் செய்தி ஒன்றானன்றி ஏனையவற்றாற் கூடாதென்பதும், அவையெல்லாம் ‘அனுபவத்தைத் தோற்றுவித்தன் மாத்திரையாற் பயன்படுதலுடைய வென்பதூஉம் போந்தவாறு காண்க.’ ஆகையால் அறிவு அருளையடையத் தூண்டுகிறது.

அருள் தாயை யடைவது சிரமம். பொதுவாகச் சிறந்த பொருள் பெரு முயற்சியால் தான் கிடைக்கும். அருளைப் பெற எவ்வளவு கஷ்டம் எடுத்துக்கொண்டாலும் அது அதிகமல்ல. சிம்மாசனத்தில் இருக்கும் தாய் நம் மனத்தில் குடியேற வேண்டுமானால், அவள் தனித்துச் சிறப்புடன் இருக்கவேண்டும். வேறு விஷயங்களுடன் அவள் குடியிருக்கமாட்டாள். அவள் கற்பிக்கும் விதம் மிக அருமை. ஒருநொடியில் உலகம் முழுவதையும் நம் கருத்தில் வைப்பள். அவளால் நம் அகக் கண்ணுக்கு ஒரு சக்தி பிறந்துவிடும். எல்லா விஷயமும் தெரிந்துவிடும். எல்லாவிடமும் கண் முன்னர் நிற்கும். இதனை ‘ஞான நாட்டம்’ என்றார் பட்டணத்தடிகள்.

ஞானச் செய்தி என்றால் என்ன? மனிதன் உடலெடுத்து இயல்பாக வளர்ந்து, அறிவுபெற்று, அருட்

செல்வியை வேண்ட அவள் காதில் சொல்லும் செய்தியைக் கேட்டறியலாம். அகக் கண்ணால் பார்த்தறியலாம். இதை உள்ளொளி யென்றும் பேரொளி என்றும் கூறலாம். இது கருவி கரணங்களின்றிக் காணும் தெளிவு. எதைக் கேட்டால், பின்னர் கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டியதொன்றில்லையோ அதுதான் ஞானச்செய்தி. எதைப் பார்த்தபின் வேறொன்றைப் பார்க்கவேண்டியதில்லையோ அது ஞானச் செய்தி.

**ஞானத்தின் நிறைவு:** முன்னொரு காலத்தில் உத்தாலகர் என்றொருவர் இருந்தார். அவருக்கு ஒரு பிள்ளை. அப் பிள்ளையின் பெயர் சுவேதகேது. அப்பையனுக்குத் தக்க வயது வந்ததும் தகப்பனார் அவனைக் கூப்பிட்டு 'சுவேதகேது' நீவேதம் படிக்கவேண்டும். ஒரு குருகுலத்தில் சேரவேண்டும். நம் சொந்தக்காரர்களில் வேதம் படிக்காதவர்கள் ஒருவரும் இல்லை. படிப்பில்லாமல் பிறப்பினால் மட்டும் பிராமணர் ஆகிவிடலா மென்று நம்மவர் கருதுவதில்லை. ஆகையால் நீ உன் படிப்பை ஆரம்பம் செய்' என்று சொன்னார். பையனும் ஒரு சற்குருவை நாடி, பன்னிரண்டு வருடம் பிரமச்சரிய விரதம் பூண்டு, கருத்தொடு நன்கு பயின்று, நிரம்பத் தேர்ச்சி பெற்று வீடு திரும்பினான். அப்பொழுது சுவேதகேதுவுக்கு வயது 24. எல்லா வேதங்களையும் படித்துவிட்டோமென்று சந்தோஷம். நன்கு படித்துவிட்டோமென்ற எண்ணத்தால் ஒரு கர்வம் உதித்து வளர்ந்தது. இதனைத் தகப்பனார் உணர்ந்தார். அவனைத் திருத்த வேண்டுமென்ற எண்ணங்கொண்டு, பையனைக் கூப்பிட்டுச் சொல்லுகிறார்: சுவேதகேது, கேட்க முடியாததைக் கேட்கவும், உணர முடியாததை உணரவும், அறியமுடியாததை அறியவும் செய்யும் வித்தையைக் கற்று வந்தனையா? அதுவே வித்தைக்கு வித்தை. பையன் சொல்லுகிறான்: 'அப்பா, அவ்வாறு ஒரு வித்தையிருப்பதாக நானறியேன். என் ஆசிரியரும் சொல்லித்தரவில்லை. அவருக்குத் தெரியுமோ தெரியாதோ அதுவுமறியேன்'' இவ்வரலாறு சாந்தோக்ய உபநிஷத்தில் கூறப்பட்டிருக்கிறது.

சுவேதகேது கேளாது வந்த வித்தை ஞானச் செய்தி.

**மூன்று சக்திகள்:** உயிர்கள் உயர்ந்த நிலையடைய மூன்று சக்திகள் உதவுகின்றன. அவைகளை இயல்புச் சக்தி,

அறிவுச் சக்தி, அருட் சக்தி என்று கூறலாம். அருட் சக்தி எனினும் ஞான சக்தி எனினுய் ஒன்றே. இயல்புச் சக்தியை ஆங்கிலத்தில் Instinct அல்லது unconscious state அல்லது Sub-Conscious state என்பர். அறிவுச் சக்தியை Intellegince அல்லது Reason அல்லது Conscious state என்பர். அருட்சக்தியை Intuition அல்லது Super-Conscious state என்பர். இம்மூன்று சக்திகளும் முறையே செய்ய எண்ண உணர உதவுகின்றன. எண்ணுதலே அறிதல் என்று கூறலாம். உணருதலேக் காண்டல் என்றும், தெளிதல் என்றும் கூறலாம் 'மருளெலாம் நீங்கச் சிந்தையுள்ளே காண்டல்' தான் உணருதல், இச் செய்கைகள் முறையே உடலிலும் மனத்திலும், உள்ளத்திலும் நடைபெறுகின்றன. இயல்புச் சக்தி மட்டுமிருந்தால் மிருகம். அறிவுச்சக்தி நிறைந்திருந்தால் மனிதன். அருட்சக்தியுமிருந்தால் அவன் தெய்வ அம்சமுள்ள மனிதன் அல்லது தேவன். ஒருவன் குழந்தைப் பருவத்தில் இயல்புச் சக்தியைக் காண்கிறோம். வயது வந்ததும் அறிவடையலாம். பின்னர் அவ்வறிவு நன்கு உபயோகப்பட்டால் அருட்சக்தியை எதிர்பார்க்கலாம்.

| பெயர் | Name | காரியம் | காரியத்தின் இடம் | உதாரணம் | |
|---|---|---|---|---|---|
| இயல்புச்சக்தி | Instinct (unconscious) | செய்தல் | உடல் | மிருகம் | குழந்தை |
| அறிவுச் சக்தி | Intelligence Reason conscious | எண்ணுதல் | மனம் | மனிதன் | காளேப் பருவம் |
| அருட் சக்தி (ஞான சக்தி) | Intiution Super-conscious | உணர்தல் | உள்ளம் | தேவன் | முதுமை |

இம் மூன்று சக்திக்கும் விரோதமில்லை. ஒன்றன்பின் ஒன்ருக நம்மை வந்தடையும். ஒன்றுபின் வருவதற்கு வழி காட்டும். ஆகையால் மூன்றும் ஒத்திருக்கும். ஒன்று வந்ததும் மற்ருென்று ஓடிவிடாது. ஆகையால் அறிவுக்கு முரணுக ஞானச் செய்திகளை நம்பலாகாது.

முதல் நிலையும் கடைசி நிலையும் அநேக விஷயங்களில் ஒத்திருப்பதுபோல் தோன்றும். அறிவு நிலையில் ஆணவம் கூத்தாடும். ஆணவம் செயற்படுங்காலம் அதற்கு முன்னர் உயிரை மறைத்துக்கொண்டு கிடக்கிறது. பின்னர் அடங்கிக் கிடக்கிறது. அறிவு நிலையில் சுயேச்சையுண்டு. நல்லதும் அல்லதும் நாம் செய்வோம். நாம் ஆராய்வோம். தீர்மானிப்போம். அதற்கு முன்னர் நாம் அறியாமையால் கட்டுண்ட காலம். பின்னர் இறைவனுல் ஆட்டுவிக்கப்படுங் காலம். அறிவுநிலையில் பலவித கவலைகள் உண்டு. அதற்கு முன்னர் கவலை தோன்ருக் காலம், பின்னர் கவலை யறுந்த காலம்.

பயன் : ஞானச் செய்தி பெறுவதால் பயன் மிக அதிகம். ஞானச்செய்தி பெறும்போது மனிதன் தனித்து நிற்கிருன். அது பெற்ற அவனுக்கு மட்டும் தெரியும். சில சமயங்களில் அவனுக்கும் சந்தேகம் தோன்றும். அவ்வாறிருக்கும்போது அவனை எப்படித் தெரிந்துகொள்ளமுடியுமென்று எண்ணலாம். அந்த உயர்நிலை அடைந்தவர்களைச் சில அடையாளங்களால் அறியலாம். அவ்வடையாளங்களை டாக்டர் ரிச்சார்டு - மாரிஸ் பக் (Dr. Richard Maurice Bucke) என்பவர் அண்ட உணர்ச்சி (Cosmic Consciousness) என்ற நூலில் விவரித்து உதாரணங்களுடன் கூறுகிருர். அவைகளைத் தொகுத்துப் பார்ப்போம்.

1. ஞானச்செய்தி கிடைக்கும்போது, திடீரென்று ஒருவித உணர்ச்சி தோன்றுகிறது. கடலில் மூழ்குவது போல் தோன்றலாம். மேகத்தில் மறைவதுபோல் தோன்றலாம். இன்னும் பலவிதமாகத் தோற்றங்கள் ஏற்படலாம்.

2. அளவிலா ஆனந்தம் உண்டாகிறது. ஒரு பெருமிதம், ஒருவெற்றி தோன்றுகிறது.

3. அறிவு பிரகாசிக்கிறது. யாவும் விளங்கித் தோன்றும். உலகத்தின் பொருளும் போக்கும் நன்கு புலப்படும்.

4. வாழ்க்கையில் ஒழுக்கமும், உயர்ந்த எண்ணங்களும் படிகிறது.

5. என்றும் அழியோம் என்ற எண்ணம் உண்டாகிறது. 'Immortality' 'என்றும் இருப்பவர்' என்ற எண்ணமே நிலவும்.

6. எமபயம் மறைந்துவிடுகிறது.

7. யான் பாவி என்ற எண்ணம் இருப்பதில்லை.

8. வாழ்க்கையில் மாற்றம் திடீரென்று வருகிறது.

9. முகத்திலும் உடலிலும் ஒரு பிரகாசம் ஏற்படுகிறது.

முயற்சி : இவ்வளவு பயன்தரும் ஞானச்செய்தியைப் பெற அதற்குத் தகுந்த பெரும் முயற்சி வேண்டும். உயர்ந்த பொருள் முயற்சியில்லாது கிட்டுவது அருமை. உண்மையான முயற்சி உடையார்க்கே இறைவன் அருள் புரிகிறான். இதனை விளக்கக் கிறிஸ்துநாதர் ஒரு அழகிய கதை சொல்லுகிறார்.

ஒரு முனிவர் மூன்று பேரைக் கூப்பிட்டார். அவர்கள் தகுதிக்குத் தகுந்த பணத்தைக் கொடுத்தார். ஒருவனிடம் ஐந்து பணமும், ஒருவனிடம் இரண்டு பணமும், ஒருவனிடம் ஒரு பணமுங் கொடுத்தார். பின்னர் அவர் தன் வழியே சென்றார். ஐந்து பணம் கொண்டவன் அதன் உதவியால் பல பொருள் கொண்டும் கொடுத்தும் வியாபாரஞ் செய்தான். அவ் வியாபாரத்தால் ஐந்து பணத்தைப் பத்துப் பணமாக்கினான். இரண்டு பணம் பெற்றவன் அம் மாதிரியே அதனை நான்கு பணமாக்கினான். ஒரு பணம் பெற்றவன் குழிதோண்டி மண்ணுக்குள் அப்பணத்தைப் பத்திரமாகப் புதைத்து வைத்தான். சில காலஞ்சென்ற பின் அம்முனிவர் அங்குவந்து அம்மூவரையும் கணக்குக் கேட்டார். ஐந்து பணம் பெற்றவன் அவர் கொடுத்த ஐந்து பணத்தையும் அவன் அதனால் சம்பாதித்த ஐந்து பணத்தையும் அவர் முன்னர் வைத்து நடந்ததைத் தெரிவித்தான். முனிவர் சந்தோஷப்பட்டு அப்பணங்களைத் திருப்பிக் கொடுத்து நன்கு செய்தாய். கொடுத்ததைப் போற்றினாய். வளர்த்தாய். ஆகையால் இன்னும் பல பொருள் உனக்குக் கொடுப்பேன். அத்துடன் அளவிலா

ஆனந்தத்தையுங் கொடுப்பேன்' என்றார். அவ்வாறே இரண்டு பணம் பெற்றவனும் கணக்கு ஒப்புவித்து நல்ல செல்வம் பெற்றான். புதைத்து வைத்தவன் வந்து சொல்லு கிறான். "ஏ பிரபு. உங்கள் பணத்தைக் கெடுக்கவில்லை. நான் வெகு பத்திரமாக வைத்திருக்கிறேன். தொலைத்துவிட்டால் நீங்கள் கோபங் கொள்வீர்களென்று நன்கு தெரியும். நீங்களோ, வித்தின்றியே விளைவு செய்வீர். போரடிக்காமல் நெல்கொண்டு வருவீர். அத்தகைய உமக்கா நான் பணத் தைப் பெருக்குவது ?" என்ன பதில் சொன்னார் முனிவர் ? "ஏ பொல்லா மகனே, சோம்பேறிப் பயலே, நீ செய்தது தவறு" என்று கோபித்து அவனிடமிருந்த பணத்தையும் வாங்கிப் பத்துப்பணம் வைத்திருப்பவனிடங் கொடுத்தார்.

இக் கதை எவ்வளவு அழகியது. உடலெடுக்கும் போதே இயற்கைத் தன்மை இறைவன் தந்து விடுகிறான். பின்னர் தகுதிக் கேற்ப அறிவைக் கொடுக்கிறான். அதனை வளர்க்கச் சொல்லுகிறான். நன்கு வளர்த்தவர்களுக்குக் கடைசியில் ஞானத்தை அருளுகிறான். கொடுத்த அறிவை உபயோகப்படுத்தவில்லையானால் கோபித்துக் கொள்ளு கிறான். தன் முயற்சி இல்லாதாருக்கு அவனருள் கிடைப் பது அரிது. அடியார் அவனை நோக்கி ஒரு அடி நடந்தால், அவன் பல படிகள் கீழிறங்கி எதிர் கொண்டழைக்கிறான்.

ஆகையால் ஞானச்செய்தி, பெற முயற்சியும் வேண் டும் ஆண்டவன் அருளும் வேண்டும். நாற்று நடுவது நம் வேலை. களை பிடுங்குவது நம் வேலை. தண்ணீர் ஊற்றுவது நம் வேலை. வேலிகட்டுவது நம்வேலை. ஆனால் அதற்கு விதை தருவது எம்பெருமான் வேலை. அச்செடியின் மலரை விரிய வைப்பது அவன் வேலை. நம் கைபட்டால் கெட்டுவிடும். ஆகையால் வேண்டிய முயற்சி செய்தால் அவனருளால் ஞானச் செய்தி பெறுவது திண்ணம்.

பிரானருள் உண்டெனில் உண்டு நற்செல்வம்
பிரானருள் உண்டெனில் உண்டு நன்ஞானம்
பிரானரு ளிற்பெருந் தன்மையும் உண்டு
பிரானருளிற் பெருந் தெய்வமும் ஆமே. (திருமூலர் 1645)

புண்ணியன் எந்தை புனிதன் இணையடி
நண்ணி விளக்கென ஞானம் விளைந்தது

மண்ணவ ராவதும் வானவ ராவதும்
அண்ணல் இறைவன் அருள்பெற்ற போதே. (திருமூலர்-1650)

காயத் தேரேறி மனப்பாகன் கைகூட்ட
மாயத் தேரேறி மயங்கு மவையுணர்
நேயத் தேரேறி நிமலன் அருள் பெற்றால்
ஆயத் தேரேறி யவனிவ னாமே. (திருமூலர்-1651)

---

# திருமுருகாற்றுப்படை சைவ சித்தாந்த விளக்கமே

வித்துவான் - செ. வேங்கடராமச் செட்டியார்

(மலர்-30 ; இதழ்-6 ; 177-ம் பக்கத் தொடர்ச்சி)

## 11. திருவேரகம்

முருகன் திருவேரகத்தில் அந்தணர் மலர்தூவி மந்திர மோதி வழிபடத் தங்குதற்குரியவன் என்பதை விளக்குகின்றார்.

திருவேரகத்துள்ள முருகனை வழிபடத் தூய்மையான ஒரு குழுவினர் வருகின்றனர். அவர்கள் மார்பில் பூணூல் காட்சியளிக்கின்றது ; ஒன்பது இழைகளைக் கொண்டு செய்த மூன்று புரிகளை யுடையதாக அது காணப்படுகின்றது. அந்தப் பூணூலையும் உடம்பின் தோற்றத்தையும் காணும்போதே அவர்கள் அந்தணர்கள் ; மறையில் கூறிய முறைப்படி நாற்பத்தெட்டு இளமை நல்யாண்டுகள் வரை பிரமசரியம் மேற்கொண்டு காத்தவர்கள் ; அறத்தைப் பயின்ற கொள்கையை யுடையவர்கள் ; ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறு தொழிலையும் வழுவாது செய்பவர்கள் ; பலவகையாக வேறுபட்ட குடிகளில் உலகத்தார் நன்கு மதிக்கும் உயர் குடிப் பிறந்த தாய்தந்தையர்களைக் கொண்டவர்கள் ; மூன்று வகையான வடிவமைத்து வளர்க்கப்படும் ஆகவனீயம், காருகபத்தியம், தென்திசையங்கி ஆகிய மூன்று

தீயினையும் செல்வமாகப் பெற்றவர்கள் — போற்றுகின்றவர்கள்; என்பன யாவும் நன்கு விளங்கிவிடுகின்றன.

அவர்கள் ஒவ்வொருவரும் ஈரம் புலராத உடையை உலர உடுத்துக்கொண்டுள்ளனர்; இதனால் அவர்கள், நீராடி நனைந்த ஆடையோடு அப்படியே வருகின்றனர் என்பது விளங்குகின்றது. அவர்கள் கைகள் தலைமேல் குவிந்து காணப்படுகின்றன. அவர்கள் நாக்கு வாய்க்குள் அசைந்துகொண்டிருக்கின்றது; அதனால் ஏதோ சொல்லுகின்றார்கள் என்பதையறியலாம். ஆனால் ஒலியெழவில்லை. பிறர் கேளாதபடி ஆறெழுத்தாலாகிய மந்திரம் உச்சரித்துக்கொண்டு மணமிக்க மலர்களை ஏந்திக்கொண்டு முருகனை அருச்சிக்கும் காலமறிந்து அருச்சிக்கின்றார்கள். அந்தணர்கள் இவ்வாறு அருச்சிக்க அதற்குப் பெரிது மகிழ்ந்து ‘ஏரகம்’ என்னும் தலத்தில் இருத்தற்கும் உரியவன்; என்று புலவர் கூறுகின்றார்.

இங்கு அந்தணர்கள், பூணூல் அணிந்து ஞானப் பிறப்பை யுற்றவர்கள்; மறை பயின்றவர்கள்; நாற்பத்தெட்டு யாண்டு பிரமசரியங் காத்தவர்கள்; தீயினை வணங்குபவர்கள்; என்பன அறிகின்றோம். இவ்வளவு தகுதிப்பாடு உடையவர்கள், இறைவனுடைய மூவகை இயல்புகளில் சிறந்ததாய உலகத்தின் வேறாய்த் தானேயாய் நிற்கும் தனிப்பர நிலையைத்தான் வழிபடுவார்கள் என்பதை உறுதியாக நம்பலாம். அவர்கள் வழிபடும் முறையினை நோக்கினும் இது புலப்படும். “உச்சிக் கூப்பிய கையினர்” என்று அவர்கள் உடம்பு வழிபாட்டை விளக்குகின்றார் புலவர். மண் முதலாய தத்துவங்களாலியன்ற உடம்பில் தலையே மேல் நிலையில் உள்ளது. அத் தலைக்கு மேல் கைகுவித்து வழிபடுகின்றார்கள். இச்செயலை நோக்கின், தத்துவங் கடந்து தானேயாய் நிற்கும் பரநிலையினைக் கருதி வழிபடுகின்றார்கள் என்பது தெற்றெனப் புலப்படும்.

இனி, மொழிவழிபாடாகிய மந்திரம் கூறும்பொழுதும் பிறர் அறிய வியலாதபடி உச்சரித்தனர் என்பதை அறிகின்றோம். பிறர் அறிய உச்சரித்தால் ஓசையெழும்; அவ்வோசை ஐம்பெரும் பூதங்களில் ஒன்றாய விண்ணிற்குரியதாகும். விண்முதற் பூதங்கட்கு அப்பாற்பட்ட பரநிலையில்

உள்ள ஓசையால் உணர்வார்க்கு உணர்வரிய பரம் பொருளை விண்ணிடமாகப் பிறக்கும் ஓசையை யெழுப்பி வழிபடுதல் அமையாதென்று கருதியே அங்ஙனம் உச்சரித் தனர் என்பதை அறியலாம். இனி, மனவழிபாடும் தானே யாய் நிற்கும் பரநிலையினையே குறித்து நிகழ்ந்தது என்பதை யூகித்தறியலாம். புலவர், மன, மொழி, மெய் என்ற முக் கரண வழிபாட்டில் மெய்யினலாய வழிபாட்டையும் மொழியாலாய வழிபாட்டையும் வெளிப்படையாகக் கூறி, மனவழிபாட்டைக் குறிப்பால்,—"விரையுறு நறுமலரேந்தி" என்பதால் அறிய வைத்துள்ளார். உருவமுடைய மலரில் உள்ள மணம், அம்மலர் முழுதும் பரவி அம்மலரைக் கடந் தும் அருவாய் நிற்றலால் உலகமுழுதும் வியாபித்து உல கைக் கடந்தும் அருவாய் நிற்கும் பரம்பரனுக்குத் தக்க உவமையாதல் கண்ட அந்தணர், தம் கருத்தை அம்மலர் களைக் கொண்டு விளக்கினர்கள். மலரின்மணம் போலப் பற்ற முடியாத நின்பர நிலையையே எம்முள்ளம் நீடுநினை கின்றது என்பதையே முருகன் முன்னிலையில் அம்மலர் களைக் கொண்டு அவர்கள் விளக்கினர்கள். 'நறுமலர்' என்னது, 'விரையுறு நறுமலர்' என்றதும் அச்சிறப்பைப் புலப்படுத்தவேயாம். பாச ஞானத்தாலும் பசுஞானத் தாலும் அறியவியலாத தத்துவங்கடந்த பரம்பொருளைக் கூறுமிடத்து, 'நறுமலரெழுதரு நாற்றம்போல் பற்றலாவ தோர் நிலையிலாப் பரம்பொருள்' என மணிவாசகப் பெரு மான் விளக்கியிருத்தல் ஈண்டு நினைவு கூர்தற்குரியது. எனவே அந்தணர்கள், மனமொழி மெய்களால் தத்துவங் கடந்து தானேயாய் நிற்கும் தனிப்பர நிலையையே வழிபட் டார்கள் என்பதை நன்குணர்கின்றோம்.

இங்ஙனம் தன் சிறப்பியல்பாகிய தானேயாம் பர நிலையை யுணர்ந்து வழிபடும் அந்தணர் வழிபாட்டின் சிறப்பை நினைந்தே முருகனும் 'பெரிதுவந்து' ஏரகத் துறைவதாகக் கூறுகின்றார் புலவர். 'குன்றுதோறாடல்' என்னும் பகுதியில் இவ்வாறு கூருது, 'குன்றுதோறாட லும் நின்ற தன்பண்பே' என்றே கூறியொழிதல் காண்க. பரநிலையை விளக்கும் பரங்குன்றத்து இருப்பைக் கூறுங் கால், "குன்றமர்ந்துறைதலும் உரியன்" என அமர்ந் துறைவதாகச் சிறப்பித்ததையும் ஈண்டு நினைக்க.

## 12. குன்றுதோறாடல்

முருகனைப் பூசிக்கும் பூசாரியாகிய வேலன், முருகனைப் போல வேடந்தாங்கி மகளிரொடு கூடிக் குன்றுகளில் ஆடும் ஆடலும் அம்முருகப் பெருமானுடைய நிலைபெற்ற பண்பாகவே கொள்ளப்படும் என்பதை இப்பகுதியில் விளக்குகின்றார் புலவர். சிலப்பதிகாரத்தில் வேட்டுவ வரியில் வேட்டுவக் கன்னிப் பெண்ணுக்குக் கொற்றவை வேடம் தரித்து அப்பெண்ணைக் கொற்றவையாகவே கருதி வழிபட்டுள்ள முறையை இங்கு நினைவுகூர்க.

குன்றத்திலுள்ள சிறுகுடியில் பெரிய ஆரவாரம் எழுகின்றது. அது என்ன ஆரவாரம் என்பதை வேலன் நோக்குகின்றான். அது குரவைக் கூத்தின் ஆரவாரம் என்பதை அறிகின்றான். ஆடுகின்றவர்கள், கொடுந்தொழிலையுடைய வில்லினால் கொல்லும் இயல்புடைய குறவர்கள்; அவர்கள் மார்பில் நறுமணமுடைய சந்தனம் பூசிக்கொண்டிருக்கின்றார்கள். அது அழகான நிறத்தோடு எழுச்சிபெற்று விளங்குகின்றது. அவர்கள் ஆடலை நோக்கும்போது அவர்கள் சுற்றத்தோடு சிறந்த மதுமாந்தி ஆடுகின்றார்கள் என்று புலப்படுகின்றது. அந்தக் கள் தானும் நீண்ட மூங்கிற் குழாயில் வைத்துப் புளிப்பேற்றிய தேனால் ஆகிய கள்ளின் தெளிவாக இருக்கவேண்டும் என்பது அவர் மகிழ்ச்சி மிகுதியால் தெரிகின்றது. மலைக்குரிய தொண்டகப் பறை நன்கு முழங்குகின்றது. அம்மகிழ்ச்சியொடு முருகனை வழிபடுமுறையில் ஆடவரும் பெண்டிருமாக அக்குறவர்கள் கைகோத்துக் குரவைக்கூத்து ஆடுகின்றார்கள். இக்குரவைக் கூத்தில் முருகனுக்கு விருப்பம் மிகுதியாகவுண்டு. அவன் மாலைக்குரிய கடவுள் அன்றோ?

இக்குரவைக் கூத்தைக் கண்ட பூசாரியாகிய வேலனுக்குத் தானும் அக்குரவையில் கலந்து அவ்வாறு ஆடவேண்டும் என்ற எண்ணம் எழுகின்றது. ஆனால் அவர்கள்போல் மதுவுண்ட மயக்கத்தால் ஆடவிரும்பவில்லை; முருகன்பால் தனக்குள்ள அன்பெனும் நறவமாந்தித் தெளிந்தாட விரும்பினான். அன்பு மிகுதியால் தன்னை முருகனாகவே கருதிக் கொண்டான். முருகனும் அவன் அன்பைக் கண்டு அவன்மேல் ஆவேசித்தான். வேலன் முருகன்போல் வேடம் புனைகின்றான்.

பச்சிலைக்கொடியையே நாராகக் கொண்டு நறுமண முடைய சாதிக்காயை இடையிடையே வைத்து அழகிய புட்டில் போல் விளங்கும் ஏலக்காயையும் கலந்து காட்டு மல்லிகையோடு வெண்கூதாள மலரையும் வைத்துத் தொடுத்த கண்ணியைத் தலையில் சூடிக் கொள்கின்றான். உடம்பெல்லாம் செந்நிறத்தைப் பூசிக் கொள்கின்றான். சிவந்த ஆடையை உடுத்துக் கொள்கின்றான். சிவந்த அடியையுடைய அசோகத்தளிரைக் காதில் தொங்குமாறு அணிந்துகொள்கின்றான். இடையில் கச்சினைக் கட்டிக் கொள்கின்றான். காலில் கழலை அணிந்து கொள்கின்றான். வெட்சி மாலையைச் சூடிக்கொள்கின்றான். குறும்புள்ளி களை யுடையதும் நறுமணம் வீசுகின்றதும் மென்மையுடையதுமாய மேலாடையை இடையில் இறுகக் கட்டி இரு முனையும் நிலத்தில் வீழ்ந்து தொங்குமாறு விட்டுக்கொள் கின்றான். குழலை யூதுகின்றான்; ஊதுகொம்பை யூதுகின் றான்; சிறிய பல வாத்தியங்களை எழுப்புகின்றான். ஆட்டுக் கிடாயைப் பின்வரச் செய்கின்றான். மயில்மேல் ஏறுகின் றான் குற்றமற்ற கோழிக் கொடியை யுயர்த்திப் பிடிக்கின் றான். கொடியினைத் தோள்களில் அணிகின்றான். நெடியனாகத் தோற்றமளிக்கின்றான்.

வேலன் இவ்வாறு முருகன் வேடம்பூண்டு நின்ற குறிப்பை யுணர்ந்த சேவிக்கும் மகளிரும் தம்மையலங்கரித் துக்கொண்டு வந்து நிற்கின்றார்கள். அவர்கள் தலையில் அழகான கண்ணி காணப்படுகின்றது. அது, ஆழமான சுனையில் பூத்த மலர்களால் இயன்றது. சுனையில் மலராத முன்னரே கொய்து விரல்களால் வலிய அலர்த்திய மலர்க ளாலியன்று வேறுபட்ட பலமணம் வீசும் தன்மையது. வண்டுகள் அதில் நீங்காது மொய்த்துக் கொண்டிருக்கின் றன. அக்கண்ணிக்குக் கீழ் இணையாகக் கட்டின மலர் மாலையைச் சுற்றிக் கூந்தல் காணப்படுகின்றது. அவர்கள் இடையில் பெரிய குளிர்ந்த தழையுடை காணப்படுகின் றது. அத்தழையுடை, கஞ்சாத் தழையையும், இலைகளோடு கூடிய ஏனை நறுமணமுடைய மலர்களையும் சேர்த்து அவற் றிற்கு இடையிடையே செவ்விய காம்பினையுடைய கடம்பினது வெண்மையான பூங்கொத்துக்களையும் இட்டு வண்டுகள் தேனுண்ணுமாறு கட்டியதாகும். அத்தகைய

தழையுடைய முத்துவடங்கள் திருத்தமாக அணியப் பெற்ற அவர்கள் மேனியில் கிடந்து அசையுமாறு உடுத்துக்கொண்டார்கள். பல வண்ணங்களையுடைய தழையுடை யுடுத்த அம்மகளிரைக் கண்டால் மயிலைக் கண்டாற்போலவே தோன்றும். அத்தகைய அழகுவாய்ந்த மடநடையுடையவர்களாய் வந்து நின்ற அம்மகளிரோடு அவ்வேலன் கலந்து கொண்டான்.

இந்நிகழ்ச்சியைக் கண்டு, முருகனைப் பாடிச் சேவிக்கும் மகளிர் வருகின்றனர். அம்மகளிர், யாழ் நரம்பு ஆரவாரித்தாலொத்த இனிய குரலை யுடையவர்களாகக் காணப்படுகின்றார்கள். வேலன், தன்னுடைய ஆடலுக்கு அப்பாடு மகளிரும் வேண்டுமென்று அக்கூட்டத்தாரையும் சேர்த்துக்கொள்கின்றான். முழவு போன்ற தன் பெரிய கைகளால் பொருந்தச் சிலரைத் தேவியர் போல ஏந்திக் கொள்கின்றான். மெல்லிய தோளையுடைய பல மான்பிணை போன்ற மகளிரைத் தழுவி அவர்கட்குத் தலைமையான இடத்தைக் கொடுத்துக் குன்றில் ஆடுகின்றான். ஒவ்வொரு குன்றிலும் இத்தகைய ஆடலுண்டு. இவ்வேலனது ஆடலும் அக்குன்றிற்குரிய முருகனது ஆடற்பண்பே யாகும்; என்கின்றார் புலவர்.

இப்பகுதியில் கூறப்படும் வழிபாடு, இறைவன், கலப்பால் உலகமாம் நிலையை நினைந்து செய்யும் வழிபாடு; என்பது தெளிவு. குன்றுதோறும் ஆடுகின்றவன் முருகன் அல்லன்; முருகன் வேடம் பூண்ட பூசாரியாகிய வேலனே ஆங்காங்கு ஆடுகின்றான். சேவிக்கும் மகளிரும் அவ்வேலனை முருகனாகவே எண்ணுகின்றனர். வேலன், தன்னை முருகனாக எண்ணி, முருகன்போல் வேடம்பூண்டு முருகனுக்குரிய ஊர்தியும் கொடியும் உடையனாய் அம்மகளிரோடு கூடியாடுகின்றான். இவ்வாடலே முருகன் வழிபாடாகும். இறைவன் கலப்பால் உலகமாகின்றான் என்று கருதிச் செய்யும் அபேத வழிபாட்டிற்கு இவ்வேலன் ஆடல் சிறந்த எடுத்துக்காட்டாகும் என்பதை நன்குணரலாம். 'உலகம்' என்பது உயிர்களை யுணர்த்தும். அவ்வுயிர்களுள் வீடு பெறுதற்குரிய சிறப்பியல்பு மக்களுக்கே யுண்டு. அம்மக்களுள் குன்றில் வாழும் குறவன், இழிந்தவனுதல் கண்கூடு. அந்த இழிந்த குறப்பூசாரியாகிய

வேலன் ஆடலையே தன்னுடலாகவும் அவ்வேலனே தானுக வும் என்றருளுகின்ருன் முருகன் என்று கருதிச் செய்யும் இவ்வழிபாடு, இறைவன், உலகமே யாம் நிலையை யுணர்ந்து செய்யும் வழிபாட்டிற்குச் சிறந்த எடுத்துக் காட்டாதல் காண்க.

## 13. பழமுதிர் சோலைமலை

இப்பகுதியில் முருகனை வழிபடுதற்குரிய பல விடங் களும் கூறப்படுகின்றன. குறமகள், முருகனை வழிபடு முறை சிறப்பாகக் கூறப்படுகின்றது. பழம் உதிர்கின்ற சோலை சூழ்ந்த மலைக்குரியன் முருகன் என்பதும் இங்குக் கூறப்படுகின்றது. ('பழமுதிர் சோலைமலை' என்பதும் ஒருதலமே என்று கொள்வாருமுளர்.) முருகனைக் கண்ட விடத்து ஏத்துமுறையும் வாழ்த்துமுறையும் அடியார்க் கிரங்கி அவன் அருள்செய்யு முறையும் இங்குதான் கூறப் படுகின்றன. திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திரு வாவிநன்குடி, திருவேரகம் என்னும் நான்கு தலங்களைக் கூறிப் பின் பொதுவகையில் குன்றுதோருடலையும் விளக் கிய புலவர், இங்ஙனம் வரையறைப் படாமல் அன்பர் வேண்டி வழிபடும் அழகிய இடங்களில் எல்லாம் முருகன் இருப்பான் என்பதை இப்பகுதியில் விளக்குகின்ருர்.

சிறிய தினையரிசியை மலரொடு கலந்து பிரப்பரிசியாக வைத்து, (பிரப்பங் கூடையில் வைக்கும் மரபுபற்றி இப் பெயர் பெற்றது.) ஆட்டுக்கிடாயை அறுத்துக் கோழிக் கொடியுடனே முருகக் கடவுள் அவ்விடத்தே நிற்கும்படி நிறுத்தி ஊர்தொறும் மேற்கொண்ட சிறப்புப் பொருந்திய விழாவிலும் தங்குதற்குரியன். அங்ஙனம் விழவு செய்யா மல் தன்பால் அன்புடையவர்கள் துதிக்கப் பொருந்தியிருக் கும் இடத்திலும் தங்குதற்குரியவன். வேலன் அமைத்த வெறியாடு களத்திலும் காட்டிலும் சோலையிலும், அழகு பொருந்திய ஆற்றிடைக் குறையிலும், ஆற்றங்கரைகளிலும் குளக்கரைகளிலும் இவற்றின் வேறுபட்ட பலவிடங்களி லும், நாற்சந்தியிலும் முச்சந்தியிலும், புதிய பூக்களையுடைய கடம்ப மரத்திலும், ஊர்க்குப் பொதுவாய்ப் பலரும் தங்கும் மரத்தடியில் அம்பலத்திலும் கந்து நட்டுள்ள இடத்திலும் (அந்து, அக்காலத்து வழிபாட்டிற்குரியதாயிருந்த நடுதறி) தங்குதற்குரியவனே என்று கூறுகின்ருர்புலவர். (தொடரும்)

# முருகன் நுண்மாண்

இறைவன் உருவம், பெயர், தொழில் ஒன்றும் இன்றிப் பரவியவன். இந்நிலவுலகில் விரவிய உயிர்கட்கு வீடு தந்திடும் கருணையால், உலகைப் படைத்துக் காத்து அழித்து அருள் செய்யும் அவன் ஓர் இலக்கியம் (=லக்ஷியம்.) அவனிடத்துள்ளது ஓர் இலக்கணம் (=லக்ஷணம்.) இவ்விலக்கணம் பொது, சிறப்பு என இருவகைப்படும். இதை முறையே தடஸ்த லக்ஷணம், ஸ்வரூப லக்ஷணம் என்பர். அவனுக்கு அளவுபடாத உண்மை, அறிவு, இன்பம் (ஸத், சித், ஆநந்தம்) இருப்பது சிறப்பிலக்கணம். உருவம், பெயர், தொழில் ஏற்றல் பொது இலக்கணம். மேலும், உயிர்கட்கு போகம் தந்து, அதன் இழிவினை உணர்த்தி, அதனினும் மேம்பட்ட வீடுபேற்றில் விழைவு வரச் செய்து, அதற்குரிய சாதனம் தந்து ஒழுகவைத்து வீடு நல்க, அவன் உருவம் கொள்வான். அவன் உருவும், அருவும், உருவருவும் ஆனவன், மிக்க அருளால் மேனி கொண்டவன். இந்த உண்மைகளைக் கந்தபுராணம் கீழ்வருமாறு விளக்குகின்றது :—

உருவோடு தொழில் பெயர் ஒன்றும் இன்றியே
பரவிய நீஅவை பரித்து நிற்பது
விரவிய உயிர்க் கெலாம்வீடு தந்திடும்
கருணையதே அலாற் கருமம் யாவதே.

—உற்பத்தி காண்டம், திருஅவதாரப் படலம் - 34

தன்னை நேரிலாப் பரம்பொருள் தனியுருக்கொண்ட
தென்ன காரணம்என்றி யேல்ஐந் தொழில் இயற்றி
முன்னைஆருயிர்ப் பாசங்கள் முழுவது மகற்றிப்
பின்னைவீடு பேறருளுவான் நினைந்த பேருளே.

—மகே - சூரன்அமை - 119

ஞானந்தான் உருவாகிய நாயகன் இயல்பை
யானுநீயுமாய் இசைத்தும் என்றாலஃ தெளிதோ
மோனந்தீர் கலாமுனிவரும் தேற்றிலர் முழுதும்
தானும் காண்கிலன் இன்னமும் தன்பெரும் தலைமை.

—மகே - சூரன்அமை - 128

கருமகாரணத்தால் தோன்றிய நமது உடல், இரதம் (=மச்சை), உதிரம், எலும்பு, தோல், இறைச்சி, மூளை, சுக்கிலம் ஆகிய எழுவகைத் தாதுக்களை உடையது. உயிர்களைக் காக்கக் கருதி, அருள் காரணத்தால் தோன்றிய அவன் திருவடிவம், மந்திரம் பதம் வன்னம் புவனம் தத்துவம் கலை ஆகிய ஆறு அத்துவாக்கள் (=வழிகள்) எனும் பகுதிகளின் தொகுப்பாகும்.

" மந்திரமே சோரியாவான் பதமே மாமுடியாத்
தொந்தமுறும் வன்னமே தொக்காகப்—பந்தனையால்
ஒத்த புவனத் துருவே உரோமமாத்
தத்துவங்களே சத்த தாதுவா—வைத்த
கலையே அவயமாக் காட்டும் அத்துவாவின்
நிலையே வடிவமாய் நின்றோய்."

—கந்தர் கலிவெண்பா

அவன் உள்குவார் உள்ளத்துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற அருளாய்த் தோன்றுவான், கருதுவார் கருதும் உருவினன். " பெம்மான் முருகன் பிறவான் இறவான் " என்பர் அருணகிரிநாதர்.

இறைவன் பல காலத்தில், பல இடங்களில், பல அன்பர்கட்குப் பலவகைப் பேறுகளை அளிப்பதற்கென்றே கொண்ட திருவுருவங்களுள் முருகன் திருவுருவும் ஒன்று. ஈசனே அவன் ஆடலால் மதலை ஆயினன். தனக்குத்தானே மகனாகிய தத்துவன். அவன் பரனோடு பேதகமல்லன். மாற்றம் மனம் கழிய எங்கும் நீக்கமற நின்று, எல்லாவற்றையும் தன் அகத்தே தாங்குவதால் பிரமம் எனப்படுகிறான். இந்த நிலை யோகிகட்குப் புருவமத்தியில் ஆயிரம் இதழ்களையுடைய தாமரைமேல் தேவ அங்குஷ்ட ப்ரமாணத்தில் சோதியாகக் காட்சியளிக்கும். அந்த சோதியே இவ்வுலகம் உய்ய விசித்திர உருக்கொண்டு குழந்தை வடிவில் வரும்.

அருவமும் உருவுமாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்றசோதிப் பிழம்பதோர் மேனியாகக்
கருணைகூர் முகங்கள்ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டே
ஒரு திருமுருகன் வந்தாங்குதித்தனன் உலகம் உய்ய

—உற்பத் - திருஅவ - 22

இந்த நுண்பொருளை உறுதிப்படுத்த முருகன் திரு அவதாரம் இலக்கியமாயிற்று. மனவாசகம் கடந்தவன் பரசிவத்தின் புருவமத்தியில் அழற்கண்ணினின்றும் சோதியாகத் தோன்றி, நிலம் நீர் தீ வளி வான் ஆகிய ஐம்பொருள் உறவு கொண்டு, சரவணப் பொய்கையில், தாமரை மலர்மேல் ஆறுமுகமும் பன்னிரண்டு கைகளும் கொண்டு முருகனுகத் திருஅவதாரம் செய்தான் என்பது புராண வரலாறு.

> "மறைகளின் முடிவால் வாக்கால் மனத்தினுல் அளக்கொணுமல்
> நிறைவுடன் யாண்டுமாகி நின்றிடும் நிமலமூர்த்தி
> அறுமுக உருவாய்த்தோன்றி அருளொடு சரவணத்தின்
> வெறிகமழ் கமலப்போதில் வீற்றிருந்தருளினுனே."
>
> —உற்பத் - திருஅவ - 96

உருவம் வந்த பிறகு பெயர், தொழில் முதலியன பற்றிய விவரங்களைக் காணலாம்.

**பெயர் :—**"மொழிக்குத்துணை முருகா எனும் நாமங்கள்" என்பது கந்தரலங்காரம். முருகனுடைய திருநாமங்கள் பல. அவற்றுள் சில கீழ்வருமாறு :—முருகன் = தெய்வத் தன்மை உடையவன், என்றும் இளமை அழகு முதலியன உடையவன் ; கந்தன் = சேர்க்கப்பட்டவன், சத்ருக்களை அழிப்பவன்; வேள்=விரும்பப்படுபவன், தலைவன்; சாமி = எல்லாம் உடையவன், உலகம் உயிர்கள் எல்லாவற்றையும் தனது உடைமைப் பொருளாகக் கொண்டவன் ; குகன் = காப்பவன், இருதய குகையில் இரகசியமாக அருள்பவன் ; கார்த்திகேயன்=கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப் பெற்றவன் ; சரவணபவன் = கங்கைக் கரையிலுள்ள தருப்பை வனத்தில் உருவுடன் காட்சியளித்தவன் ; கடம்பன்=கடப்ப மலர்மாலை தரித்தவன் ; விசாகன் = விசாக நாளிற் பிறந்தவன் ; காங்கேயன்=கங்கையில் தோன்றியவன் ; குமரன்=என்றும் இளமையுடைய குமரத்தன்மையுடையவன், தாழ்ந்த குறிக்கோள்களை அழிப்பவன் ; இவ்வாறே அவனுடைய ஆயிர நாமங்கட்கும் காரணங்கள் உள்ளன. இவற்றிற்கு ஆதாரமாக ஸ்கந்தபுராணச் செய்யுள்கள் பற்பல உள.

வடமொழி மறையின் முடிவில் "சுப்ரமண்யோம், சுப்ரமண்யோம், சுப்ரமண்யோம்" என்று மும்முறை

ஓதப்பெறுதல் காண்க. இதன் விளக்கத்தைக் காஞ்சிப் புராணம்,

" எக்கலைக்கும் பூதங்கள் எவற்றினுக்கும்......சுப்பிர
மணியன் ஓம்எனவும் முக்காற் கூறும் "

என விவரிக்கும்.

நாமம் பலவிருப்பினும் சிறப்பாக முருகனென நந் தண்டமிழிலும் ஸ்கந்தனென வடமொழியிலும் வழங்கும். முருகனிலுள்ள முருகு ஒரு பெயர்ச்சொல் பண்புப் பெயர், அது அன்விகுதிப் புணர்ந்து முருகையுடையவன் முருக னென ஆயிற்று.

அன்றும் இன்றும் இனியும் கடவுளுக்குக் காணப்படும் இலக்கணங்களைக் குறிக்கும் பண்புப் பெயரே முருகு ஆகும். இறை இலக்கணம் அனைத்தையும் அமையப் பெற்ற வன் என்ற பொருளில் முருகன் என்னும் சொல் நிற்கிறது.

" விரிகடல் வியன்தானை யொடு
முருகு உறழப் பகைத்தலைச் சென்று "

—மதுரைக்காஞ்சி - 180

இதற்கு உரை வகுத்த புலவர் நச்சும் நச்சினர்க்கினியர், "முருகு உறழப் பகைதலை சென்று—முருகன் பகைவர் மேற் செல்லுமாறு போலத் தடையறப் பகைவரிடத்தே சென்று, முருகு-தெய்வத்தன்மை; ஆகுபெயராய் நின்றது" என்றனர். றும் நிகண்டு, முருகு, இளமை, நாற்றம், முருகவேள், விழா வனப்பாம் எனக் கூறுகிறது. இயற்கை மணமும், மாறு இளமையும், கடவுட்டன்மையும், அழியா அழகும், அறிவிற் சிறந்த எச்சமயத்தவருங் கொள்ளும் ஆண்டவனுக்குரிய இயல்புகளாம். இவ்வியல்புகள் அமைந்த ஒன்றைத் தமிழ் மக்கள் முருகன் என்று வழுத்துகிறார்கள். இவற்றான் முரு கன் சமஷ்டி (எல்லாம் சேர்ந்த Eclectic) தெய்வமென் பது தெளிவு. (வியஷ்டி தனித்தனி பிரிந்தது) இதன் விரிவு பின் பகுதியில் விளங்கும். இனித் தொழில் உருவத்தி னின்று தெளிதலின் செவ்வேள் சிறப்பை ஸ்கந்த புராணத் தில் நின்று காண்பாம்.

" முருகாவென உனையோதுந் தவத்தினர் மூதுலகில்
அருகாத செல்வமடைவார் வியாதி யடைந்து நையார்

ஒருகால முந்துன்ப மெய்தார் பாகதி யுற்றிடுவார்
பொருகாலனுடு புகார் சமராபுரிப் புண்ணியனே."

"தேறுமுக மின்றித் திரிந்தேமை யாளவன்றே
ஆறுமுகம் கொண்டே யவதரித்தான் எம்பெருமான்."

இறைவன் உருவம் நால்வகைத்து. அவை அங்கம் பிரத்தியங்கம் சாங்கம் உபாங்க மென்பன.

அங்கம் - சிரசு, முகம், இருதயம் 3. பிரத்தியங்கம் - மார்பு, கழுத்து, முலை, தோள், கொப்பூழ், மறைவிடம், வயிறு, கண், மூக்கு, செவி, கை, தாள், விரல், தொடை, முழந்தாள், கணைக்கால் 16.

சாங்கம் :—(குணரூபமென்பது, அங்கத்துடன் கூடிய வகுப்புகள்).

குணத்திரயம் - திரிசூலம். சத்தியம் - பரசு. பிரதாபம்- வாள். துரகபேத்தியம் - வச்சிரம். அனுக்கிரகம் - அபயம். ருத்தியாதி சுத்தமாயை - நரகம். அதோமாயை - பாசம். விவர்ணம் - அங்குசம். சத்தநாதம் - மணி. பாசசங்காரம் - அக்கினி. (10)

**உபாங்கம் :**—(அவனைவிட்டு நீங்காமற் சமீபத்திலிருப் பது) கலை, புரிநூல், மாலை, கந்தம், நகை, இருக்கை, ஆவர ணம். (7) இதன் விரிவை வாதுளம், "அங்க, பிரத்யங்க, ஸாங்கஞ்ச, உபாங்கஞ்ச" என்று ஆரம்பிக்கும் அடிகளில் காண்க. மற்றும் இப்பகுதியை சிவஞானசித்தியார் சுபக் கம் அறுவர் உரை 47-வது பாட்டில் பார்க்க.

சிவபெருமானுக்கு மகேச்சுர மூர்த்தங்கள் இருபத் தைந்து கூறப்படுதல்போல, முருகக் கடவுளுக்கும், ஞான சத்திதரர், கந்தர், தேவசேநாபதி, சுப்பிரமணியர், கஜாரூடர், சரவணபவர், கார்த்திகேயர், குமாரர், சண்முகர், தார காந்தகர், சேநாபதி, பிரமசாத்தர், கல்யாணர், பாலசுப்பிர மணியர், கிரௌஞ்சத்துவஞ்சர், மயூரவாகனரெனப் பதி னாறு மூர்த்தங்கள் குமார தந்திரம் கூறுகிறது :

அகத்தின் அழகு முகத்தில் தெரிதலின், அங்கத்தில் தலைசிறந்தது முகம். அம்முகங்களின் நுண்மாண்பு சில வருமாறு :

(1) உலகில் வேதத்தால் கூறும் வைதீக சமயம் ஆறு. அவை கடவுளை ஓங்காரவடிவினனாக வழிபடும் காணபத்தி

யம் (கணபதி) பேரின்ப வடிவினனாக வழிபடும் கௌமாரம் (குமரன்) பேரொளி வடிவினனாக வழிபடும் சௌரம் (சூரியன்). எங்கும் நிறைந்தவனாக வழிபடும் வைணவம் (விஷ்ணு). தாயாக வழிபடும் சாக்தேயம் (சக்தி). தந்தையாக வழிபடும் சைவம் (சிவன்). இவ்வைதிக சமயத்தின் ஆறு தெய்வத்தின் கூட்டே முருகனது ஆறுமுகம்.

ஆறுசமயக் கடவுள்வேறு வேறின்றி யான்
ஒருவனே அங்கங்கிருந்து
அன்பர்க்கு முத்திதரு வித்தென்று யாவர்க்கும்
அறிவித்த வதன மணியே.

—போரூர் பிள்ளைத்தமிழ் சிறுபறை 3

ஆறு திசையுஞ் சமயங்களாறு மவுணர்களைக்
கீறும் வைவேற் பெருமான் முகமாறுங் கிளத்தும் - (9)
எல்லாக் கடவுளுமோர் வடிவாகி யிருந்தே செவ்வேள் (98)

—ஆறெழுத்தலங்காரம்

ஆறுசமய மூர்த்தன்முக மாமென்றறியு மன்பர்
வீறு சிந்தைக்கிடை வீற்றிருக்குங் குகன் (98)

—மயிலலங்காரம்

ஆகையால் முருகன் வழிபாட்டால் ஆறு தெய்வ வழிபாட்டின் பயனைப் பெறலாம்.

(2) எழுதாமறை நான்கு. அவற்றில் கையாளப்படுவது: இருக்கு, எசுர், சாமம். இவற்றின் இடையிலுள்ள எசுருக்கு 101 சாகைகள். அவற்றின் நடுவினது 51-வதாகிய போதாயன சாகை. இது எழு காண்டமாக வகுக்கப்பட்டது. இதன் மத்தியிலுள்ளது நாலாவதாகிய சதருத்திரிய காண்டம். இதன் நடுவிலிருக்கிற 5-வது பிரசனத்தின் இதயத்திலிருப்பது நமச்சிவாய என்னும் ஐந்தெழுத்து. இதனை "மும்மறையின் நடுமறையில் முனிவிலெழு காண்டத்தில்" என்ற சித்தாந்த சிகாமணி செய்யுளில் காண்க. முதன்மறையாகிய இருக்கின் முதல் பதம் அக்கினி. நடுமறையாகிய எசுரின் நடுச்சொல் சமுத்திரம். கடை மறையாகிய சாமத்தின் கடைக்கிளவி வாயு. முதல் வேதத்தின் முதலெழுத்தாகிய அகரமும் நடுவேதத்தின் நடுவெழுத்தாகிய உகரமும் கடைவேதத்தின் கடையெழுத்தாகிய மகரமும் சேர்ந்து ஓம் ஆயிற்று. அ+உ+ம்=ஓம். பாதம்+உதகம்=பாதோ

தகம் என்பதுபோல அ+உ=ஓ. ஓ+ம்=ஓம் இதி சமஷ்டிப் பிரணவம். அ, உ—ம் வியஷ்டி பிரணவம். ஐங்தெழுத்தும் பிரணவம் ஒன்றும் கூடிய ஆறும், முருகனுக்கு முகமாயிற்று. இதனை,

முகத்தி லொன்றதா வவ்வெழுந் துடையதோர் முருகன்
நகைத்து முன்னெழுத் தினுக்கு உரைபொருள் என நவில
மிகைத்த கண்களை விழித்தனன் வெள்கினன் விக்கித்
திகைத் திருந்தனன் கண்டிலன் அப்பொருள் திறனே

—உற்ப. அயனைச்சிறை 10

நன்முக மிருமூன் றுண்டால் நமக்கவை தாமேகந்தன்
றன்முக மாகியுள்ள தாரகப் பிரம மாகி
முன்மொழி கின்ற கந்த மூவிரண்டெழுத்து மொன்ற
யுன்மக னமைத் தோரா றெழுத்தென வுள்ளவன்றே.

ஆதலின் நமதுசக்தி அறுமுகம் அவனும் யாமும்
பேதகமன்றல்நம் போற் பிரிவிலன் யாண்டும் நின்றான்
ஏதமில் குழவிபோல்வான் யாவையு முணர்ந்தான் சீரும்
போதமு மழிவில்வீடும் போற்றினர்க்கு அருள வல்லான்.

—உற்ப. திருவிளை, 18, 19

(3) முருகன், இறைவனது கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, மேல்கீழ்த் திசைகளை நிரலே நோக்கிய ஈசானம், தத்புருஷம், அகோரம், சத்தியோசாதம், வாமம், அதோமுகம் ஆகிய ஆறுமுடையவன்.

வந்திக்கு மலரோனாதி வானவர் உரைத்தல் கேளாப்
புந்திக்குள் இடர் செய்யற்க புதல்வனைத் தருதுமென்னு
அந்திக்கு நிகர்மெய் யண்ணல் அருள்புரிந் தறிஞராயோர்
சிந்திக்குந் தனதுதொல்லைத் திருமுக மாறுங் கொண்டான்.

—உற். அவ. 43

"ஐந்து முகத்தோடு அதோமுகமுந் தந்து
திருமுகங்கள் ஆறாகி"

எனக் கலிவெண்பா கூறுதல் காண்க.

(4) அதோ முகத்திற்குப் பதிலாக அம்பிகை அல்லது மாயனது முகத்தை முகம் ஆறு என்பர். இஃதே யன்றி

இறைவனது அனுதி மல முத்தத்துவம் முதலிய ஆறு குணங்களே முருகனது முகமாக வந்ததை,

ஏவர்தம் பாலுமின்றி எல்லைதீர் அமலந்தள்ள
மூவிரு குணனுஞ் சேய்க்கு முகங்களாய் வந்த தென்னப்
பூவியல் சரவணத் தண் பொய்கையில் வைகும் ஐயன்
ஆவிகள் அருளு மாற்றால் அறுமுகங் கொண்டா னன்றே.
—உற்ப. திருவவ. 94

இஃதேயன்றி முருகாற்றுப்படையும் கலிவெண்பாவும் இம்முகங்கள் பற்றிக் கூறுவது கவனிக்கற்பாலது. "கருணை கூர் முகங்களாறும்" உயிர்கட்குக் கருணை பொழிவதால் 'முகம்பொழி கருணை போற்றி' என்றதும் உன்னற்பாலது.

"பேறுதரும் தெய்வம் யாவைக்கும் யான் பெருந்தேவ னென்றே
வீறுமுகம் கொண்டுபோரூர் முருகன் விளக்கியதே."

**கண் :—**

"கருத்தே புகுந்து கதிகாட்டுங்
கண்ணே வருக !"
—சந்நிதிமுறை

பிரத்தியங்கத்தில் தலைசிறந்தது கண். 'கண்ணென்ப வாழுமுயிர்க்கு' என்ற பொய்யாமொழியை ஓர்க. முருகனுக்கு ஒவ்வொரு முகத்திலும் கண்கள் மூன்றென்பர் சிலர்; இரண்டென்பர் பலர். மூன்றென்பது ஞாயிற்றுக்குக் காரணமாகிய ஞாயிற்றுக்கண், திங்கட்குக் காரணமாகிய திங்கட்கண், எரிக்குக் காரணமாகிய அழற்கண் என்பன. இம் மூன்று கண்களும் மூன்று இதழ்களோடு கூடிய வில்வம் போன்றும், நாசி அதன் காம்பு போன்றும் உள்ளன. இவற்றுள் அமயம் நேர்ந்துழி திறப்பது அழற்கண். பலரும் ஏற்கும் ஏனைய இரண்டும் எக்காலத்தும் திறந்திருப்பன. கந்தனுக்குக் கண்கள் பதினெட்டென்பது புலவர் புராண ஆசிரியரான தண்டபாணி சுவாமிகள் நூற்களில் மலிந்துள்ளன. அவற்றில் சுவை,நயம் பயப்பவை சில வருமாறு:

"அட்ச மாறிரண்டுள்ளா யெனத்துதி செய்துஅழல்
விழி ஆறையும் மறைப்பார்
புட்சரபம் போற்பொலிவதால் அடியேன்
புழுங்குவ துணர்ந்தருள் புரிவாய்" —துருபாமாலை

(தொடரும்)

சமாஜச் செயற்குழுவினர் 7-4-57 இல் தீர்மானித்தபடி, 30–5–57 ஞாயிறன்று, திருமயிலை சாரதாபுரம் பகுதியில், சமாஜச் செயலாளர் மா. ப. தியாகராஜ முதலியார் பி. ஏ. அவர்களால் குடிசில்பிரசாரமும் தொண்டும் செய்யப்பட்டன. பிள்ளைகளுக்குக் கற்கண்டு, நோட்டுப் புத்தகம், எழுதுகோல் முதலியனவும் வழங்கப்பட்டன.

——

## ஐயவினா

*" நிறங்களோ ரைந்துடையாய்*
*விண்ணோர்கள் ஏத்த மறைந்திருந்தாய் "*

—சிவபுராணம்

ஐந்து நிறங்கள் யாவை ?
அவை எவ்வாறு சிவபிரானிடம் பொருந்தியுள்ளன ?
ஏகமாகவா ? தனித்தனியாகவா ?

அறிஞர்கள் " சித்தாந்த "த்தின் மூலம் விளக்கம் எழுதவும்.

——

## செய்திச் சுருக்கத் திரட்டு

நமது சமாஜத்தோடு நெடுங்காலமாக நெருங்கிய தொடர்புடைய தூத்துக்குடிச் சைவ சித்தாந்த சபையின் 73ஆம் ஆண்டு விழா திரு. சி. எம். ஆர். அவர்கள் தலைமையில் 12, 13–5–57 தேதிகளில் சிறப்புற நடைபெற்றது. வித்துவான் சேதுரகுநாதன், புலவர் முருகவேள், ஈரோடு எஸ். மீனாட்சிசுந்தர முதலியார், குலசை ச. முத்துக்குமாரசாமி பிள்ளை முதலிய அறிஞர்கள் சொற்பொழிவாற்றினர். திரு. இ. வெண்ணிமாலைப் பிள்ளை பி.ஏ., பி.எல். அவர்கள் வரவேற்புரை நன்றியுரை முதலியன நிகழ்த்தினார்கள். செயலாளர் திரு. தெ. ச. சு. சோமசுந்தரம் பிள்ளை முதலிய சபையின் முதன்மையாளர்கள் பலரும் விழா ஏற்பாடுகளைச் சிறப்புறச் செய்திருந்தனர். 14—5—57 அன்று பாகம்பிரியாள் மாதர் கழகத்தின் 29ஆம் ஆண்டு விழா, காரைக்குடி திருமதி சரோசினிதேவி எம். ஏ. அவர்கள் தலைமையில் நன்கினிது நடைபெற்றது.

27—6—57 வெற்றிச் செய்தி :—நமது பத்திராசிரியர் தலைமையில் நடக்கும் தவத்திரு.சாந்தலிங்கர் தமிழ்க் கல்லூரி

யில் இருந்து பல்கலைக் கழகத் தேர்வு எழுதிய மாணவர்கள், வித்துவான் இடைநிலை இறுதிநிலை இரண்டிலும் 100-க்கு 100 வெற்றி பெற்றுள்ளார்கள். பலர் முதல் வகுப்பும் இரண்டாம் வகுப்பும் பெற்றிருத்தல் குறிப்பிடத்தக்கது.

28–6–57 முதல் 1–7–57 வரை சென்னைச் சிவனடியார் திருக்கூட்டச் சார்பில், திருக்கழுக்குன்றத்தில் மணிவாசகர் ஆனிமகத் திருமுறை இன்னிசைப் பெருவிழா சிறப்புற நிகழ்ந்தது. மதுரைத் திருஞானசம்பந்தர் ஆதீன இளவரசு அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினர். "திருப்புகழ் மணி" அவர்கள் திருப்படி விழாவை நிகழ்த்தினர். புலவர் முருகவேள், வித்துவான் பாலூர் கண்ணப்ப முதலியார், திரு. ச. சிவகுமாரன் எம்.ஏ., ஆசிரியர் இளவழகனுர், திரு. டி. எம். பாஸ்கரத் தொண்டைமான், எம். ஏ. மெய்கண்டார் கழகச் செயலாளர் திருஞானசம்பந்த முதலியார் ஆகியவர்கள் சிறந்த சொற்பொழிவுகள் ஆற்றினர். தேவாரம் த. நடராசன், திரு. ஆ. விநாயக முதலியார் ஆகியவர்களின் திருமுறை இசையரங்குகள் நடைபெற்றன. வழக்கம்போல் திரு. வள்ளியம்மையார் அவர்கள் மூன்று நாட்களிலும் அடியார்களுக்கு அமுதளித்துச் சிறப்புச் செய்தார்கள்.

29-6-57 முதல் 1-7-57 வரை தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையம் (சென்னை) சேக்கிழார், திருஞானசம்பந்தர், மணிவாசகர் திருநாட்கள் மிகவும் சிறப்பாகக் கொண்டாடப் பட்டன. பல அறிஞர்கள் ஈடுபட்டார்கள்.

1-7-57 திருவாசக விழா காரைக்குடியில் திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அரிய சொற்பொழிவுகள் நிகழ்ந்தன.

7–7–57 தமிழ்நாடு சித்த வைத்திய மாநாடு, திருவல்லிக் கேணி பெரியதெரு விநாயகர்கோயில் வசந்த மண்டபத்தில் நடைபெற்றது. பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

Printed at the Sadhu Press, 15, Ganapathi Mudali Street, Royapettah by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by C. M. Ramachandran Chettiar, B.A., B.L., and Published by S. Satchidanandam Pillai, B.A., L.T., for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras 4